REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர்..அண்ணதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 2] சென்னை: தை 13உ புதன் (26—1—55) ★ ★ வெளியூர்: தை 14உ வியாழன் (27—1—55) [இதழ் 192

## கிழ நாய்க்கு மீண்டும் இளமை!

லண்டன், ஜன. 24—

வயதுவந்த கிழ நாய் ஒன்றின் வயிற்றில் உள்ள முக்கிய நரம்புகளை மாற்றியமைத்ததின்மூலம் அந்த நாய்க்கு மீண்டும் இளமை வருமாறு செய்யப்பட்டதாம். இந்த ஆபரேஷனை சோவியத் நிபுணரான விளாடிமிர் டெமிகோல் என்பவர் செய்திருக்கிறார். ஆபரேஷன் நடைபெற்று மூன்று ஆண்டுகள் ஆகியும், அந்த நாய்க்கு கிடைத்த இளமை இன்னும் அழியாது இருக்கிறதாம். சோவியத் விஞ்ஞானகூடத்தில் டாக்டர் டெமிகோலின் கீழ் பயிற்சி பெற்றவர்கள், விலங்குகளுக்கு கெட்டுப்போன இருதயத்திற்குப் பதில் வேறு இருதயம் ஒன்றை 30 நிமிடங்களில் வைக்கிறார்களாம்.

# கீழ்க் கோடியில் கொந்தளிப்பு

## சியாங்கை பாதுகாப்பதில் அமெரிக்கா பிடிவாதம்

### புதிய சீன மீது அமெரிக்க படைகளை ஏவ....!

ஐசனோவர் எதேச்சாதிகாரம் பெறுகிறார்!

### மூன்றுவது உலகப் போருக்கு அடிகோலுமா?

வாஷிங்டன், ஜன. 25—

சியாங்-கே-ஷேக் தஞ்சம் புகுந்திருக்கும் பார்மோசாவையும் அடுத்துள்ள பெஸ்காடோரசையும், மற்றும் சமீபத்தில் உள்ள சம்பந்தப்பட்ட தீவுகளையும் பாதுகாப்பதற்கு யு. எஸ். படைகளை உபயோகிக்க, பிரதிநிதிகள் சபை ஜனாதிபதி ஐசனோவருக்கு அதிகாரம் அளித்துவிட்டதாகத் தெரிகிறது.

புதிய சீனாவிற்கு எதிராக, சியாங்-கே-ஷேக் 'தேசீய சீன' அரசாங்கத்தைக் காப்பாற்றுவதற்காக, அமெரிக்கப் படைகளை, அவசியம் ஏற்படுகிற வேளையில் பயன்படுத்துவதற்கான எதேச்சாதிகார உரிமையை, அமெரிக்கக் குடியரசுத் தலைவர், அமெரிக்க மக்கள் சபை—செனேட் ஆகிய இரு சபைகளிடமும் கோரியிருந்தார்; இக்கோரிக்கைக்கு மக்கள் சபை வெளிநாட்டு விவகாரக் குழு ஏற்கனவே ஒப்புதல் அளித்துவிட்டது.

மேற்படி கோரிக்கை தீர்மானம், பார்மோசாவைப் பாதுகாப்பதற்குரிய தலைவர் விளக்கத்துடன், நேற்று, மக்கள் சபை—செனேட் சபையில் ஒரே காலத்தில் கொண்டுவரப்பட்டது. அத்தீர்மானத்தை வெளிவிவகாரக் குழுவின் ஆலோசனைக்கும், கருத்துக்கும் மேற்படி இரு சபைகளாலும் அனுப்பி வைக்கப்பட்டது.

மேற்படி தீர்மானமானது அமெரிக்கக் காங்கிரசால் ஒப்புக்கொள்ளப்பட்டு, குடியரசுத் தலைவரின் கைசாத்தும் இடப்பட்டுவிட்டால், உடனடியாக சட்டமாகிவிடும்.

கோரிக்கைத் தீர்மானத்துடன் குடியரசுத் தலைவர் அனுப்பியுள்ள விளக்கவுரையில் குறிப்பிட்டுள்ளதாவது:—

அமெரிக்காவின் வெளிநாட்டுக் கொள்கையின் முக்கிய உள்ளடக்கமாக இருந்துவருவது, அமெரிக்காவின் பாதுகாப்பிற்கு ஏற்பாடு செய்வதும், நியாயம் நிரம்பிய-கண்ணியமான சமாதானத்தை உருவாக்குவதுமேயாகும். மேற்கு பசிபிக்கில், பார்மோசா வளைகுடா பகுதியில், அமெரிக்காவிற்கு ஆபத்தையும், சமாதானக் கேட்டையும் ஏற்படுத்தும் ஒரு பயங்கர சூழ்நிலை உருவாகி வருகிறது.

ஜப்பானிய விரோதம் முடிவடைந்த 1945-ம் ஆண்டிலிருந்து, பார்மோசாவும், பெஸ்கடோரசும் அமெரிக்காவினிடம் விசுவாசமான நட்புறவு கொண்டுள்ள சீனக் குடியரசிடம் இருந்துவருகிறது. அத்தீவுகள், நட்புறவு கொண்டிருப்பவர்களிடமே இருந்துவரவேண்டியது அவசியமாகும் என்பதை அமெரிக்கா ஒப்புக்கொண்டிருக்கிறது.

இதற்கு மாறாக, அமெரிக்காவை பகையெனக் கொண்டிருக்கிற நாட்டின் ஆதிக்கத்திற்கு இத்தீவுகள்

(4-ம் பக்கம் பார்க்க)

## விற்பனை வரி விதிப்பில் டெல்லியின் தலையீடு

### மாநிலங்கள் எதிர்க்கின்றன

கோலாப்பூர், ஜன. 25—

மாநில அரசாங்கங்கள் விதிக்கும் விற்பனை வரியை மத்திய அரசாங்கம் கட்டுப்படுத்துவதை மாநில அரசாங்கங்கள் விரும்பவில்லை என்று மத்திய அரசாங்க வர்த்தக மந்திரி டி. பி. கார்மார்க்கர் தெரிவித்திருக்கிறார்.

அவர் இந்தியா முழுவதும் ஒரே மாதிரியான விற்பனை வரி விதிப்பை ஏற்படுத்தவேண்டும் என்ற எண்ணங்கொண்டவர் என்றும் கூறியுள்ளார்.

## காமன்வெல்த் மாநாடு

எல்லாப் பிரச்சினைகளும் பேசப்படும்

லண்டன், ஜன. 25—

"உலகில் முக்கியத்துவம் பெற்றுள்ள எல்லாப் பிரச்சினைகள் பற்றியும் அடுத்து நடைபெறப்போகும், காமன்வெல்த் முதலமைச்சர்கள் மாநாட்டில் பேசப்படும். அவைகளைப் பற்றிய முழு விபரங்களை வெளியிடுவது கடினம்," என்று, பிரிட்டிஷ் பிரதமர்சர்ச்சில் காமன்சில் கூறினார்.

காமன்வெல்த் மாநாட்டில் விவாதிக்கப்படும் நிகழ்ச்சி நிரலைப் பற்றி சோரன்சன் என்ற உறுப்பினர் கேட்டபோதுதான், சர்ச்சில் இப்படி பதில் அளித்தார்.

## மக்களுக்கு நன்மை செய்யாத நகரசபைத் தலைவர்

### மக்களால் கீழிறக்கப்பட்டார்!

ராஜ்கோட், ஜன. 25—

சௌராஷ்டிர மாநிலத்தில் உள்ள நகர சபைகளில் சரித்திரத்திலேயே முதன் முறையாக, ஒரு நகர சபையின் தலைவரும், உப-தலைவரும் மக்களுக்கு நன்மை எதும் செய்ய இயலவில்லை என்று கூறி, பதவி இழக்கச்செய்யப்பட்டுள்ளனர்.

மத்திய சௌராஷ்டிர மாவட்டத்திலிருக்கும் பாகர்சா என்ற நகரில், ம.-சோ. கட்சியினர் பெருவாரியாக இருப்பதினால் அந்தக் கட்சிக்காரர்களே தலைவராகவும், துணைத் தலைவராகவும் உள்ளனர்.

அவர்கள் இருவர் மீதும், 'மக்களுக்கு எதும் நல்லது செய்யவில்லை,' என்ற குற்றச்சாட்டுகளை விசாரிக்க, ம.-சோ. கட்சியினர் ஒரு விசாரணைக் குழு நியமித்தனர்.

பொது மக்களிடம் அவர்கள் வாக்குமூலம் பெற்றபின், அந்த இருவரையும் ராஜினமா செய்யச் சொல்லிவிட்டு வேறு இருவரை நகர சபைத் தலைவராகவும், துணைத் தலைவராகவும் நியமித்துள்ளனர் என்று செய்திகள் கூறுகின்றன.

## 'இந்தியப் பகுதியில் இன்னும் வெளி அரசின் ஆதிக்கமா?'

### 'இந்தியப் பேரரசு அதைப் பொறுத்துக் கொண்டிருப்பதா?'

### 'அனைத்தும் அபத்தமானதாகும்'

கோவா பிரச்சினை குறித்து சொந்த நாடு திரும்பும் மார்ஷல் டிட்டோ

எர்ணுகுளம், ஜன. 25—

"ஒரு பெரும் ஜனநாயக முன்னேற்ற நாடான இந்தியா போன்ற ஒரு நாடு, வெளி அரசின் ஆதிக்கத்தில் உள்ள ஒரு சிறு திட்டால் பிரிக்கப்பட்டுக் கிடப்பதும், அதைத் தன்னுடன் இணைத்துக் கொள்வதற்கு இன்னமும் காத்துக்கொண்டு இருப்பதும் அபத்தமாகும். போர்ச்சுகல் ஆதிக்கத்தின் கீழ் உள்ள இந்தியப் பகுதியைக் குறித்தே நான் இவ்வாறு குறிப்பிடுகிறேன்."

—இவ்வாறு, 24 நாட்களாக இந்தியா முழுவதும் சுற்றிப் பார்த்து சொந்த நாடான யூகோ திரும்பும் மார்ஷல் டிட்டோ, பத்திரிகை நிருபர்களிடம் குறிப்பிட்டார்.

அவர், மேலும், இந்தியாவில் கால் வைப்பதற்கு முன்னதாக இந்தியாவைக் குறித்து தான் கொண்டிருந்ததற்கும், இந்தியாவை நேரில் சுற்றிப் பார்த்ததினால் தான் கொண்டுள்ள கருத்துக்கும் முழுதும் மாறுபாடு உடையதாகும் எனவும், இந்தியா தனது உள்ளத்தில் பெரிய அடிச்சுவட்டை உண்டாக்கிவிட்டிருக்கிறது எனவும், அதை சில சொற்களால் குறிப்பிடுவதே இயலாது எனவும் டிட்டோ குறிப்பிட்டார்.

## காந்தியார் சமாதிக்கு பாக். கவர்னர் அஞ்சலி

### தளத்திற்கான சலவைக் கற்கள் அனுப்புவாராம்!

புதுடில்லி, ஜன. 25—

இந்தியாவுக்கு வருகை தந்துள்ள பாக். கவர்னர் - ஜெனரலான குலாம் முகம்மது, டாக்டர் கான் சாஹிப், மற்றும் இந்தியாவில் உள்ள பாக். தூதுவர் கஜ்னபர் அலிகான் ஆகியவர்களுடன் காந்தியாரின் சமாதிக்குச் சென்று பூமாலைகள் அணிவித்து மரியாதை செலுத்தினார்.

சமாதியின் தளம், சலவைக் கற்களால் அமைக்கப்பட வேண்டும் என்றும், தான் பாகிஸ்தான் சென்றதும், வெள்ளை, பச்சை, குங்குமப்பூ ஆகிய நிறங்களில் சலவைக் கற்கள் அனுப்பித் தருவதாகவும் அவர் குறிப்பிட்டதாகத் தெரிகிறது.

★

### டாக்டர் கான்சாகிபுக்கு வரவேற்பு

இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு முதன் முதலாக வருகை தரும் டாக்டர் கான்சாகிபிற்கு டில்லி விமான நிலயத்தில் மகத்தான வரவேற்புத் தரப்பட்டது.

பாக். கவர்னர் ஜெனரலுடன் வந்த அவர், அங்கு நேருவைப் பார்த்துவிட்டு, தம்மருகில் நின்ற மேகர்சந்த் கன்னாவிடம், 'ஜவகர்லால் சற்று வயதாகி விட்டவர் போல் காணப்படுகிறார்' என்று குறிப்பிட்டாராம்.

நேரு இதைக் கேட்டுச் சிரித்துக்கொண்டே, 'ஆமாம்; சற்று வயதாகிவிட்டது' என்று கூறினாராம்.

அவர்களிருவரும் ஏழாண்டுகளுக்குப் பின்னர், இப்போதுதான் சந்திக்கின்றனர்.

## திரு-தமிழர் தலைவர்கள் ஜாமீன் மனு

### இந்திய உயர் நீதிமன்றம் தள்ளுபடி செய்தது

புதுடில்லி, ஜன. 25—

திரு-கொச்சி சட்டசபை உறுப்பினர்களான ஏ. குஞ்சன் நாடார், வில்லியம், தாணுலிங்க நாடார், அனந்தராமன், என். சிம்சன், டேனியல், நூர்முகமது ஆகியோரும், மற்றும் இருவரும் தங்களை ஜாமீனில் விடுதலை செய்ய வேண்டுமென்று கோரி இந்திய தலைமை உயர்நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்திருந்தனர். இம்மனுவை இந்திய தலைமை உயர்நீதி மன்றம் தள்ளுபடி செய்துவிட்டது.

சென்ற ஆண்டு ஆகஸ்டு 11-ந் தேதியன்று நடைபெற்ற கலவரத்தை ஒட்டிய வழக்குகளுக்காக இவர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

இவர்கள் தங்கள் மனுவில், கீழ் கோர்ட்டுகள் தங்களுக்கு ஜாமீன் தர மறுத்துவிட்டனவென்றும், தாங்கள் இப்போது நடைபெறும் திரு-கொச்சி சட்டசபைக் கூட்டத்தில் கலந்துகொள்ள வேண்டும் என்றும் குறிப்பிட்டிருந்தனர்.

இவர்களது வழக்கை மைசூரில் உள்ள நீதிமன்றம் ஒன்றுக்கு மாற்ற தலைமை உயர்நீதி மன்றம் ஒப்புக்கொண்டிருக்கிறது. இவர்களது வழக்குகளை விசாரிக்கும் நீதிமன்றத்தில் ஜாமீன்கோருமாறு மனுவைத் தள்ளுபடி செய்த நீதிபதிகள் கூறினர்.

தக்கலை தனி மாஜிஸ்திரேட் நீதிமன்றத்தில், இவர்கள் மீது, சர்க்காரை கவிழ்க்க சதி செய்தார்களென்றும், இதர பல குற்றங்களுக்காகவும் 11 வழக்குகள் தொடரப்பட்டிருக்கின்றன.

## விலகிவிட்டாராம்!

சோவியத் ரஷ்யாவின் வர்த்தக அமைச்சராக இருந்த ஏ. மிக்கோயன் இராஜினமாச் செய்துவிட்டதாகத் தெரிய வருகிறது. அவருக்குப் பதிலாகத் தற்போது வி. பாவ்லோவ் என்பவர் வர்த்தக அமைச்சராக நியமிக்கப்பட்டிருக்கிறாராம்.

Best copy available.

நம் நாடு
ஆசிரியர் : அண்ணாதுரை
சென்னை 26—1—1955 புதன்

# விழா முடிந்தது! வீடு திரும்பினர்!

ஆவடியில் காங்கிரஸ் தலைவர்களும், அந்த அற்புத புருஷர்களைக் காணவந்த பெருமக்களும் கூடினர்; பண்டித நேருவை தரிசித்தனர்; அவரால் அறிமுகப்படுத்தப்பட்டுள்ள தேபரைப் பார்த்தனர்; இவ்வளவு ஜனத்திரளும் கூடுவதற்கு திறம்பட ஏற்பாடு செய்து தந்த சாமானிய காமராசரைக் கண்டு களித்தனர்; கொண்டுவந்த பணத்தை மனமறியச் செலவழித்துவிட்டு, தங்கள் தங்கள் வீடு திரும்பியுள்ளனர்.

யூகோ நாட்டின் குடியரசுத் தலைவர் மார்ஷல் டிட்டோவையும், ஆவடியில் திரண்டிருந்த மக்கள் பார்க்கத்தான் செய்தனர்; அவர் ஏதோ அப்பெருங்கூட்டத்தில் பேசினதையும் அம்மக்கள் கேட்கத்தான் செய்தனர்.

இரண்டாவது உலகப் பெரும் போரில் நாசகாலன் இட்லர் ஏவிய நாசத்திலிருந்து இட்லர் கையாண்ட அதே முறையை தானும் மேற்கொண்டு, யூகோ நாட்டைக் காப்பாற்றிய மாவீரன் மார்ஷல் டிட்டோவும், மறைந்த உத்தமர் வகுத்துத் தந்த அகிம்சை வழியில்தான் நாங்களும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தினிடமிருந்து நாட்டை விடுவித்தோம் எனப் பகட்டாகக் கூறிவரும் காங்கிரஸ் தலைவர் பண்டித நேருவும் அகமகிழ ஆவடி அரங்கில் சந்தித்ததைத்தான் மக்கள் கண்டிருக்க முடியும். இருவர் வெற்றியிலும் அடங்கியிருக்கும் அடிப்படைக் கோட்பாடுகளில் மறைந்திருக்கும் முரண்பாடுகளை, ஏன், மக்கள் சிந்திக்கப் போகிறார்கள்? சிந்திப்பதற்கும், அவர்களுக்குந்தான் நெடுநாள் பகையாயிற்றே!

நேரு முதல் காமராசர் ஈருக உள்ள காங்கிரஸ் தலைவர்கள், தாங்கள் ஆளவந்தார்களாக அமர்ந்து, சென்ற ஏழு ஆண்டுகளாகச் சாதித்துள்ளதை எடுத்தியம்பி உள்ளனர்; இனி சாதிக்க இருப்பதையும் சித்தரித்துக் காட்டியுள்ளனர். தங்கள் எதிர்கால இலட்சியத்தையும் அத்தலைவர்கள் விளக்கித்தான் உள்ளனர். அவ்வளவுக்கும் மக்கள்—அங்குதான் இருந்தனர் — இருந்தாலும் செவிமடுத்திருப்பர் எனக் கூறுவதற்கில்லை.

காட்டுமிராண்டிகளான நாகர்கள், நிர்வாண கோலத்தில் வருவதைக் கண்டாலே கதிமோட்சம் கிட்டும் என நம்பிக் கிடக்கும் மனப்போக்குக் கொண்டுள்ள மக்கள், காங்கிரஸ் தலைவர்களைக் காண்பதே நாட்டுத் தொண்டு, கட்டை கடைத்தேறுவதற்கான புனித வழி எனும் நிர்மானத்தில், ஆவடியில் கூடியதில் ஆச்சரியமொன்றுமில்லை. அந்த ஒன்றைத் தவிர வேறு எதையும் அவர்களிடம் எதிர்பார்ப்பதும் கூடாது; அது அறியாமையுமாகும்!

இலட்சக் கணக்கில் மக்களை ஓரிடத்தில் கூட்டிவைத்து, தங்களைக் கண்டு மகிழவைத்து, அதனால் தாங்கள் உள்ளம் பூரிப்படைந்து, புது உற்சாகம் பெறுவது காங்கிரஸ் தலைவர்களின் நீண்டகால பழக்கம். அரசியல் கட்சிகளுக்கு, இப்போக்கு உடன்பிறந்த ஒன்றாகும். இப்போக்கு அறவே கூடாது எனக் கூறிவிடுவதற்குமில்லை. இது, அளவுகடக்க வேண்டுமென ஆதரவு காட்டுவதற்குமில்லை. அனைத்துக்கும் வரையறை இருப்பது போன்றே, இதற்கும் ஒரு வரம்பு இருக்கவேண்டியது இன்றியமையாதது.

காங்கிரஸ் எதற்காகத் துவங்கப்பட்டதோ, அந்த அடிப்படை இலட்சியம் ஈடேறி ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. அவ்வடிப்படை இலட்சிய நிறைவேற்றத்துடன் காங்கிரஸ் உடலில் அதுவரை ஓடிக்கொண்டிருந்த உயிர் நாடியும் ஒடுங்கி ஓய்ந்துவிட்டது. அதை மீண்டும் உயிர்ப்பிக்க, காங்கிரஸ் தலைவர்கள் மேற்கொண்டு வரும் முயற்சி, கோரிய பலனை நிச்சயமாகக் கொடுக்கப் போவது கிடையாது. இத்தோல்வியிலிருந்து வெளிப்படையாகக் கிளம்பியுள்ள வினாக்குறிதான் 'நேருவுக்குப் பிறகு யார்?' என்பதாகும்.

நேருவிற்குப் பிறகா,—இதோ தேபர்—, இருக்கிறார் என ஆவடி அறிவித்திருக்கிறது. நேருவை தரிசித்தாலே போதுமென்ற நிலையில் பெரும்பான்மையான மக்களுக்கு நேருவிடம் மனமயக்கம் இருக்கிறதே அல்லாது, அவரை உலகுக்குக் காட்டியும், இந்த உன்னத நிலைக்கு உயர்த்தியும் வைத்துள்ள காங்கிரஸ் கட்சியிடம் பற்றோ பாசமோ இருக்கவில்லை. இந்த உண்மையை சென்னையில் நடைபெற்ற தேபர் ஊர்வலக் காட்சி, துளியும் ஐயத்திற்கிடமின்றி, நாட்டுக்கு உணர்த்தி இருக்கிறது. இவ்வுண்மை பயங்கரமான விளைவுகளை உள்ளடக்கிக் கொண்டிருப்பதாகும். மக்களாட்சிக்குரிய பண்பாட்டை மக்கள் உள்ளங்களிலிருந்து கல்வி எறியச் செய்யும் வலிமை, இம்மயக்கத்திற்கு உண்டு என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. நிற்க,

ஆவடியில், வழக்கம்போல் தீர்மானங்கள் சில நிறைவேற்றப்பட்டுள்ளன. அவைகளில் முக்கியமானது என விளம்பரப்படுத்தப்படுவது இந்தியத் துணைக் கண்டத்தில் 'சோஷலிச சமுதாய அமைப்பை'க் காண வேண்டும் எனக் கூறப்படும் இலட்சியத் தீர்மானமாகும். இத்தீர்மானத்தைப் பொறுத்தவரையில், அதற்குப் பண்டிதர் கொடுத்துள்ள விளக்கம், சோஷலிச சமுதாய அமைப்பின் அடிப்படையை ஐயத்திற்கிடமின்றி அறிவிப்பதாக இல்லை. வியப்பிற்குரிய விபரீத விளக்கமாக இருக்கிறது, அவர் கூற்று!

நாம் இதுவரை அறிந்துள்ள சோஷலிச சமுதாய ஏற்பாட்டைக் காணத்தான் காங்கிரசும் விழைகிறதோ இல்லையோ, காங்கிரஸ் போட்டுள்ள சோஷலிச இலட்சியத் தீர்மானம், இந்தியத் துணைக்கண்டத்தின் அரசியலில், உடனடியாக ஒரு பெருங் குழப்பத்தைத் தோற்றுவிக்கும் என்பது மட்டும் முக்காலும் உறுதியாகும். அதாவது, தானும் சோஷலிச சமுதாயத்தை உருவாக்க முயற்சிக்காமல், அவ்வாய்ப்பினை மற்ற அரசியல் கட்சிகளின் கைகளுக்கு மாறிவிடாமல் தடுக்கவுமான ஒரு ஏற்பாடாகத்தான், சோஷலிச தீர்மானத்தை ஆவடியில் காங்கிரஸ் நிறைவேற்றியிருக்கிறது என்றே நாம் தீர்மானிக்கிறோம். தங்களுக்கு எதிர்காலத்தில் ஏற்பட இருக்கிற நெருக்கடியிலிருந்து, சோஷலிசம்தான் எங்கள் கட்சியின் அடிப்படை என்று கூறிக்கொண்டுவரும் அகில இந்திய அரசியல் கட்சிகள், எவ்வாறு தங்களைக் காப்பாற்றிக்கொள்ளப் போகின்றன என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.

சோஷலிச தத்துவம் குறித்து பண்டிதர் கூறியுள்ள விளக்கம், சோஷலிச ஏற்பாட்டைக் குறிப்பிடுவதாக இல்லை. அவர் கூற்று ஒரு 'அரசியல் அலாவுதீன் அற்புத தீபம்' எனத்தகும் போக்கிலேயே உள்ளது.

காங்கிரசிலே மாசு நிரம்பியுள்ளன எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதை இதுவரையில் காங்கிரஸ் தலைவராக இருந்த பண்டிதரால் களைய முடியவில்லை. இத்துறையில் பண்டிதர் முழுத் தோல்வியே கண்டுள்ளார். அவரே தோற்றுள்ள ஒன்றில், அவருக்குக் கட்டியங் கூற, அவரால் நியமிக்கப்பட்டுள்ள தேபர் அவர்கள் எப்படி வெற்றி பெறுவார் என்பது, எவருக்கும் புரியாத பெரும் அரசியல் புதிராகும். பண்டிதர் மேற்கொண்ட 'அதிர்ச்சி மருத்துவம்' கண்டதோ முழுத் தோல்வி; 'மிரட்சி மருத்துவம்' புரியக் கிளம்பியிருக்கும் தேபர் பெறப் போவது மட்டும், அதைத் தவிர வேறு எதுவாக இருக்க முடியும்?

விழா முடிந்தது! விடு திரும்பினர்!—என்ற அளவில், ஆவடி மாநாடு மங்களகரமாக முடிந்திருக்கிறது.

## பாகிஸ்தானிலும் அணுசக்தி ஆராய்ச்சி

பாகிஸ்தான் அரசாங்கம் அணுசக்தி அபிவிருத்திக்காக மத்திய ஆராய்ச்சிக்கூடமொன்றை நிறுவ முடிவுசெய்திருப்பதாகதெரிகிறது. பெஷாவர், லாகூர், டாக்கா ஆகிய இடங்களில் பிராந்திய ஆராய்ச்சிக் கழகங்களும், பாக். விஞ்ஞான ஆராய்ச்சிக் குழுவால் நிறுவப்படும் என்று தெரிகிறது.

## வேதனையான விசித்திரம்!

தென்னாப்பிரிக்காவில் தலைவிரித்துத் தாண்டவமாடும் நிற வேற்றுமையைப் பரிசிலனை செய்வதற்காக இரண்டாண்டுகளுக்கு முன்னர் நியமிக்கப்பட்ட ஐ. நா. கமிஷனை, தென்னாப்பிரிக்க சர்க்கார் இன்னும் ஒப்புக்கொள்ளவே இல்லை என்ற விவரத்தை தென் ஆப்பிரிக்க சர்க்கார் உள்நாட்டு அமைச்சர் வெளியிட்டிருக்கிறார்.

## கிராமங்களுக்கு வைத்திய பட்டதாரிகள் செல்ல மறுப்பதேன்?

### வடநாட்டு மருத்துவ மனைகளுக்கு திராவிட 'பணியாளரே' தேவைப்படுகின்றனராம்

மத்திய மந்திரி அமிர்தகௌரி கூறுகிறார்

திருவனந்தபுரம், ஜன. 25—

"பல மாநிலங்கள், கிராமப்புறங்களிலுள்ள மருத்துவ மனைகளுக்கு டாக்டர்கள் பெறுவதில் கஷ்டப்படுகின்றன; இதற்குக் காரணங்கள் மூன்று உண்டு—தரப்படும் சம்பளம் போதுமானதல்ல; குடியிருப்பு வசதிகள் இல்லை; கிராம மருத்துவ மனைகளில் உபகரணங்கள் தேவையான அளவு இல்லை—என்பவையாகும்"

என்று, மத்திய சுகாதார மந்திரி ராஜகுமாரி அமிர்தகௌரி குறிப்பிட்டிருக்கிறார்.

திரு—கொச்சி மத்திய சுகாதார கவுன்சிலின் மூன்றாம் ஆண்டு விழாவில் பேசிய அவர், "திரு—கொச்சியில்தான், அதன் மக்கள் தொகையில் அதிகமான சதவிகிதத்தினர் கல்வி கற்றவர்களாக உள்ளனர்; ஏராளமான மருத்துவ மனைகள்—குறிப்பாகவட இந்தியாவில் உள்ள மருத்துவ மனைகள்—தங்களின் நர்சுகள் தேவைக்கு திரு-கொச்சியையே நம்பிக் கிடக்கின்றன," என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

## நிலம் இல்லாத ஏழைகளுக்கு நிலம் வழங்க சென்னை சர்க்கார் திட்டம்

### தனி உதவி கலெக்டர்களை நியமிக்கப்போகிறார்களாம்

நிலவரி அமைச்சர் மாணிக்கவேலரின் ஆசைமொழி!

"நிலமில்லாத ஏழைகளுக்கு நிலம் வழங்க தனியாக தாசில்தார்களையும், உதவி கலெக்டர்களையும் சென்னை சர்க்கார் நியமிக்கப்போகிறது; எனவே, உங்களுடைய எதிர்காலம் மிக நன்றாக இருக்கும்; இம்முடிவு, அண்மையில் நடைபெற்ற சென்னை அமைச்சர்களின் கூட்டமொன்றில் செய்யப்பட்டிருக்கிறது,"

என்று, இராணிப்பேட்டை இரட்டைமலை சீனிவாசன் விடுதியின் 6-வது ஆண்டு விழா, அமைச்சர் பி. பரமேசுவரன் தலைமையில் நடைபெற்றபோது, இராணிப்பேட்டை பஞ்சாயத்துக் குழுவினர் சார்பில் தமக்களிக்கப்பட்ட வரவேற்புக்குப் பதிலளித்துப் பேசுகையில் அமைச்சர் மாணிக்கவேலர் கூறியிருக்கிறார்.

மேலும் அவர், இரட்டைமலை சீனிவாசனின் உருவப் படத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில், 'இந்தியாவில் 4-ல் ஒரு பகுதியினரான அரிசனங்களையும், மற்ற பிற்பட்ட வகுப்பினரையும் கைதூக்கி விடாவிட்டால், இந்தியா வாழாது' என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

திருத்தத்தைச் சர்க்கார் செய்ய வேண்டுமென்றும் கோரி சங்கத் தலைவர் வி. எம். கடிகாசலம் கூறியிருக்கிறார்.

## தொழிலகங்களில் ஆட்குறைப்பு

தோழர் கடிகாசலம் கண்டனம்

"'வியாபார மந்தம்' என்று சாக்குச் சொல்லி, பெருமளவு ஆட்குறைப்புச் செய்வதில், பல வியாபார, தொழில் நிறுவனங்கள் முனைந்துவிட்டிருக்கின்றமையால், அதைத் தவிர்க்க, உழைப்பாளர் நலனில் நல்லதொரு உபாயம் கண்டுபிடிக்க வேண்டுமென்பது அவசியமாகிறது,"

என்று, சென்னையில் நடைபெற்ற வர்த்தக நிறுவன ஊழியர் சங்கக் கூட்டமொன்றில் வற்புறுத்தப்பட்டிருக்கிறது.

எல்லா தொழில், வர்த்தக நிறுவனங்களிலும் ஒவ்வொரு ஆண்டும் கிடைக்கின்ற இலாபத்தில் 10 சதவிகிதத்தை சேமித்துவைத்து, 'ஊழியர் ஊதிய சேமிப்பு நிதி' யொன்று அமைக்கவேண்டுமென்றும், வியாபாரம் மலிந்த நிலை அடைகிற காலத்தில் இந்த நிதியைப் பயன்படுத்தி ஆட்குறைப்பைத் தவிர்க்கலாமென்றும் யோசனை கூறி, கம்பெனிகள் அமைப்புக்கும், நீடிப்புக்கும் இத்தகைய நிதி அமைப்பு முறையைக் கண்டிப்பாக்கி, கம்பெனிகளின் சட்டத்தில் தேவையான ஒரு

## மலேரியா தடுப்பு

டி. டி. டி. பயனற்றதாகிறது

உலக நிபுணர் கருத்து

புதுடில்லி, ஜன. 25—

ஆசிய நாடுகளில் மலேரியாவை தடுப்பதற்காக "டி. டி. டி." என்ற கிருமி நாசினி உபயோகிக்கப்பட்டு வருகிறது. ஆனால், இப்போது இந்தக் கிருமி நாசினியால் மலேரியா கொசுக்கள் சாவதில்லை என்றும், டி. டி. டி. மருந்தின் வேகத்தைத் தாங்கிக்கொள்கிற ஆற்றலை, சில மலேரியா கிருமிகள் பெற்றிருப்பதாகவும் டாக்டர் பால் எப். ரசல் என்ற பிரபல உலக மலேரியா நிபுணர் கருத்தறிவித்திருக்கிறார்.

"வேறு வகைகளில் மலேரியாவைத் தடுப்பதானால் அதற்காகும் பெரும் செலவு, ஆசிய நாடுகளின் பொருளாதார நிலைக்கு அதிகமானதாக இருக்கும். டி. டி. டி. கிருமி நாசினியின் வீரியத்தால் சகாமலிருக்கிற மலேரியா கிருமிகள், ஜாவாவில் இரண்டு இடங்களிலிருப்பதாகக் காணப்பட்டது," என்று பத்திரிகை நிருபர்களிடை பேசிய அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

இதைப்போன்றே கிரீஸ் நாட்டிலுமிருப்பதாகவும் அவர் கூறினாராம்.

"இப்போது கையாளப்பட்டு வரும் கிருமிநாசினிகள் பலன் தராது போய்விட்டால் மேலும் விரிவானதொரு மலேரியா தடுப்பு முறை கையாளப்பட வேண்டியிருக்கும்," என்றும் அவர் கருத்தறிவித்திருக்கிறார்.

## இலவச மதுபானம் இனி கிடையாது

பாடியாலா, ஜன. 25—

பெப்சு மாநில சர்க்காரின் விருந்தினர் மாளிகைகளில் தங்குவோருக்கு இதுவரை இலவசமாகத் தரப்பட்டுவந்த மதுபானம், சிகரெட்டு முதலியவை இனி அப்படி இலவசமாகத் தரப்படாது என்று தெரிகிறது.

சில நாட்களுக்கு முன்புதான் அதிகாரபூர்வமான விழாக்களின் போது மதுபானம் வழங்குவதை நிறுத்தவேண்டும் என்று, பெப்சு சர்க்கார் அறிவித்திருந்தது.





# குரங்கு அப்பம் பிரித்த கதைதான் காங்கிரசாரின் 'சோஷலிச'த் திட்டம்

## 'குதிரை போன்ற கழுதை' என்பது போலிருக்கிறது-'சோஷலிசம் மாதிரி' என்ற காங்கிரசாரின் கூற்று

### மாயூரத்தில் தோழர் ஈ. வெ. கி. சம்பத் முழக்கம்

"சோஷலிசம்—என்பது, எல்லோரும் புரிந்துகொள்ளக்கூடிய வார்த்தை; அதை 'சோஷலிசம் போல' என்று, பொருள் விளங்கக்கூடாத ஒரு வார்த்தையாகக் காங்கிரஸ்காரர்கள் கூறுகிறார்கள்; 'குதிரையைப் போன்ற கழுதை' என்கிறார்கள்; 'சோஷலிசம் மாதிரி அதன் அடிப்படையில் உண்டாக்கப்பட்டது,' என்று சொல்கிறார்கள்; நாட்டின் இன்றைய நிலையில், ஒரு கட்சி, பொருளாதாரத் துறையில் சோஷலிசத்தைப் பேசித்தான் தீரவேண்டும்; முதலாளித்துவக் கொள்கையான தனி மனிதனின் உரிமையைப் பேச முடியாது.

"சமதர்மம்—என்ற வார்த்தையை திருடியிருக்கிறார்கள்; ஓடிக்கொண்டிருக்கும் ரயிலில் டிக்கெட்டில்லாமல் பிரயாணிகள் ஏறுவதுபோல, 'சமதர்மம்' என்ற ரயிலில் ஏறுகிறார்கள்; கொள்கை, இலட்சியத்தைப் பறித்துக்கொள்ளுகிறார்கள்; அந்தச் சொல்லை, அடுத்த தேர்தலிலே பயன்படுத்தப் பார்க்கிறார்கள்; அந்தக் காங்கிரஸ் நண்பர்கள் சோஷலிசம் அமைத்தால் யாருக்கு உபயோகமாக இருக்கும் என்று நமக்குத் தெரியும்; காங்கிரஸ் முகாமிலே முதலாளிகள் இரண்டறக் கலந்துவிட்டிருக்கிறார்கள்; குன்னியூர் சாம்பசிவ அய்யர், தஞ்சை ஜில்லா போர்டு தலைவராக ஆகியிருக்கிறார்; பழைய கோட்டை பட்டக்காரர் காங்கிரசில் சேர்ந்திருக்கிறார்; தஞ்சாவூர் நாடார் குடும்பம் காங்கிரசில் சேர்ந்துவிட்டது; சேர்ந்த இவர்களெல்லாரும் தலைவர்களாக—ஆட்சி செய்யும் தலைவர்களாக—தென்னாற்காடு ஜில்லா போர்டுக்கு சாமிக்கண்ணு படையாச்சி தலைவராகி இருக்கிறார்; திருவாரூரில் இருக்கும் வி. எஸ். தியாகராச முதலியார் ஆவடி மாநாட்டின் பந்தலின் மேற்பார்வையாளராக இருக்கிறார்—ஆக, இவர்களின் 'சோஷலிசம்' எத்தகையதாய் இருக்குமென்று தெரிந்துகொள்ளுங்கள்.

"இவர்கள் கூறுகிறார்கள்—'ஒரே ஆட்சியின்கீழ் முதலாளித்துவமும் பயமின்றி வாழலாம்; சமதர்மமும் தைரியமாக வாழலாம்'—என்று! குரங்கு அப்பம் பிரித்த கதைபோல் இருக்கிறது இது; முதலாளித்துவ முதாம் முகமலர்ச்சியோடு இதை ஏற்றுக்கொள்ளுகிறது; அவர்களுடைய பத்திரிகைகள் மகிழ்ச்சியோடு ஆதரித்து எழுதுகின்றன; இவைகள் அத்தனையும் நாம் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்; திராவிட நாட்டினர் வாழ்வுக்கு இவர்கள் எதிரிகள்—வஞ்சகர்கள்—தந்திர முறையைக் கையாளுகின்றனர்.

"விவசாயிகளுக்கு நிலத்தைப் பிரித்துக் கொடுத்துவிட்டால் பிரச்சினை தீர்ந்துவிடுமா? விவசாயத்தையே நம்பிக்கொண்டிருக்கிறவர்களின் தொகையைக் குறைக்க வேண்டும்; '100-க்கு 50 பேர்தான் விவசாயிகள்,' என்ற நிலை வரவேண்டும்; அது விவசாயத்திற்கு ஒரு நிவாரணமாகும்; பாக்கிப் பேருக்கு என்ன செய்வது? வேறு என்ன வேலை?—சர்க்கார்தான் இதை முடிவு செய்ய வேண்டும்; இன்றைய சர்க்காரால் இதைச் செய்ய முடியுமா?"

—இவ்வாறு, தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள், மாயூரத்தில், ஆசிரியர் வேலாயுதம் மன்ற ஆண்டு விழாவில் சிறப்புரை ஆற்றுகையில் குறிப்பிட்டார்.

மாயூரம் ஆசிரியர் வேலாயுதம் மன்றத்தின் நாலாவது ஆண்டு விழா 21—1—55 மாலை 6 மணியளவுக்கு மாயூரம் சந்திப்பு கிராஸ் ரோடுக்கு அருகில் சித்தக்காடு கே. இராமையா அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தோழர் என். இளங்கோ ஆண்டு அறிக்கையைப் படித்தார். தோழர் கோ. கலியமூர்த்தி நாட்டுப்பண் இசைத்தார்.

தோழர் சம்பத் அவர்கள் தொடர்ந்து பேசியதாவது:—

"25 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த நமது நிலைமை என்ன? தமிழக வரலாற்றிலே இது ஒரு திருப்புமுகம்; இந்தத் திருப்புமுகத்தில் இருக்கும் நம்மை 200-ஆண்டுகளுக்குப் பின்பு கொண்டாடுவார்கள். நம்மால் சொல்லப்பட்ட கருத்துக்கள் இன்று செல்வாக்காகக் காண்கிறது.

பழமைக்காக — சுயநலத்தைக் கட்டிக் காத்து வருவதற்காக ஏற்பட்டிருந்த எதிர்ப்பு அணிகள் உடைந்துவிட்டன; அன்று நாம் சொன்ன கருத்துக்களை எதிர்த்தவர்கள், இன்று அதே கருத்துக்களை அவர்களே சொல்லி, தாங்களும் இருபதாம் நூற்றாண்டின் மனிதர்கள் என்று காண்பித்துக் கொள்ளுகிறார்கள்.

காமராசர், இன்று, நான்கு வார்த்தையில் பேசுகிறார்; இந்த வார்த்தையை அன்று சொல்லியதற்காக சுயமரியாதைக்காரர்கள் அடிபட்டார்கள் — உதைபட்டார்கள்; அன்று, உயிரோடு இருக்கும் சுயமரியாதைக்காரன் என்றால் 'முரடன்' என்று அர்த்தம். இன்று அந்த இயக்கம் செல்வாக்கு பெற்றுவிட்டது. இந்த மாறுதல் எப்படி ஏற்பட்டது? இவ்விதமான ஆண்டு விழாவில் நாம் அதை கவனிக்கவேண்டும்.

சமுதாயத்திலிருந்த குற்றங்களை எடுத்துக் காட்டியது சுயமரியாதை இயக்கந்தான். இன்று சமதர்மத்திற்கு நாட்டிலிருந்த எதிர்ப்பு அணி உடைந்துவிட்டது. நாட்டின் பழைய சம்பிரதாயத்தை அடியோடு ஒழிக்காவிட்டாலும், சனாதனத்தை அடியோடு சாய்க்காவிட்டாலும், நிலப்பிரபுத்துவத்தை அடியோடு அகற்றாவிட்டாலும் அதற்காக ஏற்படுத்தியிருந்த பலமான அணி உடைந்துவிட்டது; ஆனால், அதை பிரச்சாரம் செய்து வந்த இயக்கம் ஆல்போல்தழைத்துவிட்டது.

சமுதாயப் பிரிவினையை மொழியின் அடிப்படையில் இல்லாமல் இனத்தின் அடிப்படையில் ஏன் கேட்கக்கூடாது — எனக் கருதி, 'திராவிட நாடு திராவிடருக்கே' என்ற கோரிக்கையை வெளியிட்டோம்.

ஆவடி காங்கிரஸ், தீர்மான ரூபமாக அதை எதிர்ப்பதாகத் தெரிவிக்கிறது. தீர்மானத்தை பண்டித கோவிந்தபந்த் கொண்டுவந்தார்; நம்முடைய திராவிடநாட்டுப் பிரச்சினையை ஒழிக்க வேண்டும்; நாட்டுப் பிரிவினை பிரச்சினையை எதிர்க்க வேண்டும் என்பதுதான் அந்த தீர்மானத்தின் சாரம். இத்தனை ஆண்டுகளாக அவர்கள் காது கேட்காததுபோல் இருந்தார்கள்; இன்று, கேட்டுத்தீர வேண்டிய நிர்ப்பந்தம் அந்தக் காதுகளுக்குஏற்பட்டுவிட்டது; அந்த அளவுக்கு நாம் வளர்ச்சி அடைந்துள்ளோம்.

கல்யாணியில் நடந்த காங்கிரஸ், மூன்றரை லட்சம் ரூபாய் செலவிட்டது; ஆவடியில் நடைபெற்றுள்ள காங்கிரஸ் பத்து லட்சம் அல்லது பதினைந்து லட்சம் ரூபாய் செலவிட்டிருக்கும்—முடிந்த பிறகுதான் தெரியும்—என்று சொல்லிவிட்டார்கள். இந்தத் திருவிழா ஏன்? இதை நடத்த வேண்டிய அவசியம் என்ன? இது ஒரு 'அரசியல் சர்க்கஸ்'—அரசியல் தெளிவு அல்ல!

காங்கிரசின் சரித்திரத்திலேயே முதன் முதலாக மாநாட்டு வளைவுத் தட்டிகள் தமிழில் எழுதப்பட்டிருக்கின்றன; இதன் மூலம் சம்பிரதாயம் உடைக்கப்பட்டது பத்திரிகையில் வெளிவந்த படத்தில் பம்பாய், குஜராத்திக்காரர்கள் தங்கியிருக்கும் இடத்தைப் பார்த்தால் முதலில், 'பம்பாய்' என்று தமிழில் எழுதப்பட்டிருக்கிறது; பம்பாய்க்காரனுக்குத் தமிழ் தெரியாது; அதுவும் முதலில் தமிழில் எழுத வேண்டிய அவசியம் என்ன ஏற்பட்டது? இரண்டாவது ஆங்கிலத்திலும், மூன்றாவது இந்தியிலும் எழுதப்பட்டிருக்கிறது; மாநாட்டின் வரவேற்புரை தமிழில் நிகழ்த்தப்பட்டது; நம்முடைய தொண்டும், பணியும் அவர்களை அந்த நிலைமைக்குக் கொண்டு போய்விட்டிருக்கிறது. இது ஒரு அரசியல் தந்திரம்—காங்கிரசின் சுயரூபத்தை கொஞ்ச நேரத்திற்கு மறைத்துவைக்க உதவுகிறது; அதிலும் பழைய சொரூபம் தெரிகிறது— இந்தியில் பேசினார்கள் — புரியாவிட்டாலும் நாகரீகமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள் தமிழர்கள்; தமிழில் பேசும்போது, வடநாட்டினர், கூச்சலிட்டு, 'புரியவில்லை'யெனக் கூறி பந்தலை விட்டு எழுந்து போயிருக்கிறார்கள்; அதை, தலைவர் கண்டித்திருக்கிறார்.

## "தமிழைப் பழித்தவரை தலைகுனியச் செய்யும் தனித் திறமையும்-பெருமையும் கொண்டவர்"

"தமிழ்ப் பண்பாட்டினை உலகறியச் செய்ய முயலுவேன்"

டாக்டர் சிதம்பரனாருக்கு பாராட்டும்—வேண்டுகோளும்

சென்னை, ஜன. 25—

"தமிழைப் பழித்தவன் எவனாயினும் சரியே, அவனைத் தலைகுனியச் செய்யும் பெருமை, டாக்டர் சிதம்பரநாதரின் தனித்திறமையாகும். திருச்சி வானொலி நிலையத்தின் காலை நிகழ்ச்சியான 'கீதாரம்பத்'தை 'இசைக் கதிர்' ஆக்கி, தமிழர் உள்ளத்தில் நல்லிடம் பெற்றவர் டாக்டர் செட்டியார்; இந்தியப் பாராளுமன்றத் தலைவர் தோழர் மாவலங்கர், வடமொழிக்குத் தாய்ப் பட்டம் சூட்டியபோது, அதை ஆதாரத்தோடு எதிர்த்து, தமிழைக் காத்த இருபதாம் நூற்றாண்டுச் செங்குட்டுவன் டாக்டர் ஏ. சி. செட்டியார்; இந்தி மொழி வெறியர்களுக்குத் தமிழின் தனிச் சிறப்பை எடுத்தியம்பியவர் டாக்டர் செட்டியாரிடம் படித்த ஜான்மார் என்பவர். அவரைப் போன்று இன்றும் பல மேலைநாட்டு அறிஞர்கள் தோன்றுவதற்கு வழி வகுத்துவர வேண்டுகிறோம். தமிழ்ப் பண்பாட்டை வெளியுலகுக்குத் தெரிவிக்கும் கடமை, தமிழ்த் துறையில் வெளிநாடு செல்லும் முதல் மொழித் தூதுவரான தங்களைச் சேர்ந்தது."

—இவ்வாறு, நேற்று மாலை பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் பிரிட்டிஷ் கவுன்சில் அழைப்பின் பேரில், லண்டன் செல்லும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவரும், சென்னை மாநில தமிழாசிரியர் கழகத் தலைவருமான டாக்டர் அ. சிதம்பரநாதனார் எம்.ஏ., அவர்களுக்கு நடந்த வழியனுப்புப் பாராட்டுக் கூட்டத்தில் பேசுகையில் பலர் குறிப்பிட்டனர்.

விழா, சென்னை தமிழாசிரியர் கழகம், மாணவர் மன்றம் ஆகியவற்றின் சார்பில் நடைபெற்றது. பேராசிரியர் மயிலை சிவ. முத்து தலைமை வகித்தார்.

செங்கற்பட்டு தமிழாசிரியர் கழகம், தஞ்சை தமிழாசிரியர் கழகம், தஞ்சை நாட்டார் பேரவை பட்டி மன்றம், வாலாசாபாத் இந்து மத பாடசாலை ஆகியவற்றின் சார்பிலும் மலர் மாலைகளும், பாராட்டுரைகளும் அளிக்கப்பட்டன.

விழாவுக்குப் பெருவாரியாக ஆண்களும், பெண்களும் குழுமியிருந்தனர். திராவிட முன்னேற்றக் கழக மத்திய துணைச் செயலாளர்களில் ஒருவரான தோழர் கே. ஏ. மதியழகன் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

தோழியர் டாக்டர் எஸ். தருமாம்பாள், தோழர்கள் ரா பி. சேதுப்பிள்ளை, எஸ். எஸ். அருணகிரிநாதர், அன்பு கணபதி, பி. எஸ். செட்டியார் ஆகியோர் பாராட்டிப் பேசினர்.

"நான் செய்த தொண்டு இந்த இருபதாண்டு காலத்தில் மிக மிகச் சிறியது. அதை மக்கள் பெரிதாக நினைத்துப் பாராட்டும் தன்மை அறிந்து மிக மகிழ்கிறேன். இந்த நேரத்தில் நான் ஒன்றும் அதிகமாகக் குறிப்பிட விரும்பவில்லை. ஆயினும், வெளிநாடுகளில் தமிழ், தமிழர், தமிழ்நாடு பற்றி என்னால் இயன்ற அளவு தொண்டு புரிவேன் என்று உறுதியாகக் கூறுகிறேன்,"

என்று, பாராட்டுக்கு நன்றி தெரிவிக்கும் முகத்தான் பேசுகையில் டாக்டர் சிதம்பரநாதர் குறிப்பிட்டார்.

கூட்டம் தொடங்குவதற்கு முன் ஒரு சிறு தேநீர் விருந்தும் நடைபெற்றது. (ந. நி.)

## 'மின்னல்'

'மின்னல்' என்ற தமிழ் மாத பத்திரிகையின் கௌரவ ஆசிரியர், வெளியிடுபவர், அச்சிடுபவராக முறையே திரு. ஆர். கஸ்தூரி, திருமதி ஆர். கஸ்தூரி - ருக்மணி அம்மாள், திரு. சிதம்பரம் ஆகியோர் கோவைமாவட்ட கலெக்டர் முன் பதிவு செய்துகொண்டனர்.

## முகவரி மாற்றம்

மீ. சு. இளமுருகு பொற்செல்வி,
முதலியார் தெரு,
கடம்பர் கோவில், குழித்தலை.

# தமிழகமெங்கும் திராவிடர் திருநாள்

**புத்திரகவுண்டம்பாளையம் :**

16—1—55ல், இவ்வூர் தி. மு. கழகத் தோழர்களால் அண்ணாமிதி வண்டி நிலையத்தில், விழா கொண்டாடப்பட்டது. சிறுவருக்கும் பெரியோருக்கும் தின்பண்டங்கள் வழங்கப்பட்டது.

**ஆனையாம்பட்டி—சேலம் :**

16—1—55 மாலை 4 மணிக்கு, இவ்வூர் தி. மு. கழகச் சார்பில், தோழர் சி. தங்கராசன் தலைமையில் நடைபெற்ற விழாக்கூட்டத்தில், தோழர்கள் ஆர். வெங்கட்ராமன், ஏ. ஆனைமுத்து, எம் குப்புசாமி, டி. ஆர். மாரியப்பா ஆகியோர் சொற்பொழிவாற்றினர் கூட்டத்திற்கு முன்பு ஊர்வலம் ஒன்று நடைபெற்றது. தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

**பரமக்குடி :**

14—1—55 காலை 8 மணிக்கு, பரமக்குடி தி. மு. கழகக் கட்டிடத்தில், தோழர் எம். ஆர். எஸ். மணி அவர்களால் கழகக் கொடியேற்றி வைக்கப்பட்டது. தோழர் எம். ஆர். வகாப், எம். ஆர். எஸ் மணி, ஆர். எஸ். பிரகாசம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். சுமார் 100 பேருக்குப் பொங்கல் வழங்கப்பட்டது.

**அருப்புக்கோட்டை :**

14—1—55ல், இங்குள்ள எஸ். எஸ். பழனிச்சாமி மண்டபத்தில், ஒலிபெருக்கி இசையுடன் முதல் நாள் விழா ஆரம்பமாயிற்று.

15—1—55 மாலை 5 மணிக்கு ஒயிற்கும்மி, நடனம் முதலியன நடைபெற்று, இரவு 7 மணியளவில் தோழர் எம். எஸ். இராமசாமி தலைமையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர் இராமசாமி, 'சமுதாயம்' என்னும் தலைப்பில் சொற்பொழிவாற்றினார். பின்னர், தோழர் க. திருமாறன் 'மதம்—சமுதாயம்' ஆகியவை பற்றிச் சொற்பொழிவாற்றினார்; இறுதியில் 'படியாதவன் பாடு' எனும் தலைப்பில் வில்லுப் பாட்டு நிகழ்ச்சி ஒன்றும் நடைபெற்றது.

16—1—55 மாலை 3 மணிக்கு மெதுவாக மிதிவண்டி விடுதலும், உயரத் தாண்டுதலும், நீளந்தாண்டுதலும், மிதிவண்டிஇசை நாற்காலி, மற்றும் விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றன. விளையாட்டுகள் முடிவுற்ற பின்னர், தோழர் சிவசண்முகசுந்தரம் தலைமையில் விழாப் பொதுக் கூட்டம் ஆரம்பமாகியது. தோழர்கள் சு. காளிமுத்து, சோ. முத்துராமலிங்க சேது, பி. பி. என். கல்லதம்பி, சி. பிச்சை ஆகியோர் 'அரசியல்' என்பது பற்றி சொற்பொழிவாற்றினர். இரவு 10 மணிக்கு எம். எஸ். ஆர். மறுமலர்ச்சி நாடக மன்றத்தாரால், தோழர் மு. கருணாநிதி எழுதிய 'பரப்பிரம்மம்' நாடகம் நடைபெற்றது.

17—1—55 மாலை 3 மணிக்கு விழா ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்பத்தில் கம்பு வீச்சும், பின்னர் இசை விருந்தும் நடைபெற்றது. இரவு 8 மணிக்கு தோழர் எம். எஸ். இராமசாமி தலைமையில் நடைபெற்ற விழாப் பொதுக் கூட்டத்தில், தோழர்கள் என். வி. நடராசன், தில்லை-வில்லாளன் ஆகியோர் "பொருளாதாரம்" என்பது பற்றிச் சொற்பொழிவாற்றினர். இறுதியில், போட்டியில் வெற்றி பெற்றோருக்கு தோழர் என். வி. நடராசன் அவர்களால் பரிசுகள் வழங்கப்பட்டது.

**பனைக்குளம் :**

14—1—55-ல் தி. மு. கழகச் சார்பில், தோழர் தல்ஹான் தலைமையில் விழா நடைபெற்றது. தோழர்கள் ஷேக்சுல்தான், தமிழ்ச்செல்வன், பரிதி ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

# உலக அரங்கில்

## வட ஆப்பிரிக்கா :

வடஆப்பிரிக்காவில் பிரெஞ்சு ஆதிக்கத்திலிருக்கும் டுனீசியாவிற்கு சுயாட்சி வழங்குவதை ஒட்டி, டுனீசியப் பிரதமர் தாஹெர் பென் அமருடன் பிரெஞ்சுப் பிரதமர் மெண்டே பிரான்ஸ், பாரிசில் தொடர்ந்து பேச்சு வார்த்தைகள் நடத்தினர்.

இன்றைய பேச்சுக்கள், பெரும்பாலும் நீதி சம்பந்தப்பட்ட பிரச்னைகளைப் பற்றியதாகவே இருந்தது. டுனீசியர்களுக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்கும் ஏற்படும் சச்சரவுகளைத் தீர்த்து வைக்க கட்டாய பஞ்சாயத்து நீதிமன்றங்களை நிறுவுவதுபற்றியும் பேச்சு வார்த்தைகள் நடைபெற்றிருக்கின்றன.

இன்னும் முடிவு பெருமல் இருக்கும் பிரச்சினை எல்லாம் டுனீசியப் போலீஸ் படை எந்த நாட்டின் வசத்தில் இருப்பது என்பதும் பாதுகாப்புப் படைகள், டுனீசியாவில் இருக்கவேண்டுமா என்பது பற்றியதும்தான் எனத் தெரிகிறது.

இரு தரப்பினரும், பேச்சு வார்த்தைகளில் முன்னேற்றம் இருப்பதாகவும் தெரிவித்திருக்கின்றனர்.

★

## ஈரான்

தலைநகரான தெஹ்ரான் நகரிலிருந்து வடக்கே மூன்று கல் தொலைவில் உள்ள தெவோதியாவில், ஈரான் இராணுவ துப்பறிவோர், மறைத்து வைக்கப்பட்டிருந்த கள்ள வெடி குண்டுகளைக் கண்டு பிடித்தனர்.

தாழ்ந்த குட்டிச்சுவர்களின் அடியில் மரப்பெட்டிகளில் சேமிக்கப்பட்டிருந்த பன்னிரண்டாயிரம் நாட்டு வெடிகுண்டுகள் கைப்பற்றப் பட்டதாகத் தெரியவருகிறது.

கம்யூனிஸ்டு டுடே கட்சிக்காக, இராணுவத் தளவாட சாலையிலிருந்து இராணுவ அதிகாரிகளால், மேற்படி வெடிகுண்டுகள் களவாடப்பட்டிருக்கிறது என அதிகாரிகள் குறிப்பிட்டுள்ளனர். இவ்வெடிகுண்டுகளின் உதவியால், தெஹ்ரான் நகரின் பாதுகாப்பு ஏற்பாட்டை, ஒரே காலத்தில், டுடே கட்சியினரால் சீர்குலைத்து விட முடியும் எனவும் அவ்வதிகாரிகள் கருத்தறிவித்தனர்.

வெடிகுண்டுகள் கைப்பற்றப் பட்டதின் எதிரொலியாக, ஒரு தச்சு வேலை செய்யும் மங்கை உள்ளிட்ட 30 நபர்கள் கைதாகி உள்ளனர். வெடிகுண்டு கண்டு பிடிக்கப்பட்ட இடத்திலிருந்து நூறு கெஜ தூரத்தில் டுடே கட்சிக்குச் சொந்தமான ஒரு சுரங்க அச்சுக்கூடத்தையும், தெஹ்ரான் நகர இராணுவ கவர்னர் கைப்பற்றியுள்ளதாகவும் அறிவிக்கப் படுகிறது.

★

## பெல்கிரேட்

யூகோஸ்லாவியாவின் முன்னுள் கம்யூனிஸ்டு தலைவர்களான டிஜிலாஸ், டேடீஜிர் ஆகிய இருவர் மீது தொடரப்பட்ட வழக்கில், அரசாங்கத்திற்கு எதிராக பிரசாரம் செய்தார்கள் என்று சாட்டப்பட்ட குற்றம் நிரூபிக்கப்படவே, வழக்கை விசாரித்த நீதிபதி, அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒன்றரை ஆண்டு சிறை தண்டனை அளித்துத் தீர்ப்புக் கூறியுள்ளார்.

அவர்கள் இருவரும் சிறைக்குச் செல்லவேண்டிய அவசியமில்லை; அதாவது மூன்றாண்டுகள் வரையிலும், இரண்டாண்டுகள் வரையிலும் முறையே டிஜிலாசும் டேடீஜ்ரும் எந்தவிதக் குற்றங்களையும் செய்யாமல் இருந்தால், அவர்கள் மேற்படி சிறைத் தண்டனையை அனுபவிக்க வேண்டிய அவசியமே ஏற்படாது.

வெளிநாட்டு நிருபர்களிடம் இருவரும் கூறிய தகவல்தான் அவர்கள் செய்த குற்றமாகும். டிஜிலாஸ் முன்னுள் யூகோ அரசாங்கத் தலைவர்களாக இருந்த நால்வரில் ஒருவராவார். கம்யூனிஸ்டு கட்சியில் 'போலிட்பீரோ' உறுப்பினருமாவார். 'யூகோ அரசியலில் தேக்கநிலை ஏற்பட்டு இருக்கிறது. அதைப் போக்க ஒரே கட்சி ஏற்பாடான கம்யூனிஸ்ட் அரசாங்கத்திற்கு எதிராக ஒரு சமூக ஜனநாயகக் கட்சியைத் துவங்க வேண்டியது கட்டாயமாகும்' என டிஜிலாஸ் வெளிநாட்டு நிருபர்களிடம் கூறினதே, அவர் புரிந்த குற்றமாகும்.

'டிட்டோ பேசுகிறார்' என்ற டிட்டோவின் வாழ்க்கை வரலாற்றின் ஆசிரியராவார் டெடிஜீர். கம்யூனிஸ்டு கட்சியின் பொதுக் குழுவிலிருந்து அவர் ஏற்கனவே நீக்கப்பட்டிருப்பவர் 'தனது விருப்பத்திற்கு மாருக கம்யூனிஸ்ட் கட்சித் தலைமை நடக்க வலியுறுத்துகிறது. ஜனநாயக முறைக்கு மாருக கம்யூனிஸ்ட் நடவடிக்கைகள் இருந்து வருகின்றன' என வெளிநாட்டு நிருபர்களிடம் அறிவித்ததுதான், அவர் செய்த குற்றம்.

★

## சீனு

சீனுவில் சிறைவைக்கப்பட்டிருக்கும் அமெரிக்க விமானிகள் 11 பேரில் ஒருவரான ஸ்டீபன் கீபா என்பவரை அவரது குடும்பத்தவர் இருவர், சீனச் சிறையில் சென்று சந்திக்க சம்மதித்திருப்பதாகத் தெரிகிறது.

அண்மையில்தான் சிறைவைக்கப்பட்டிருக்கும் அமெரிக்க விமானிகளை அவர்களது உறவினர்கள் வந்து சந்திக்க அனுமதி தருவதாக சீனு அறிவித்துள்ளது.

---

பாக். கவர்னர்—ஜெனரல்

## இந்தியா வருகை

புதுடில்லி, ஜன. 25—

பாகிஸ்தான் கவர்னர்-ஜெனரலான குலாம் முகமது, போக்குவரத்து மந்திரி டாக்டர் கான் சாகிபுடன் விசேஷ விமானமொன்றின் மூலம் இன்று பகல் டில்லி வந்து சேர்ந்தார்.

விமான நிலையத்தில் டாக்டர் இராசேந்திர பிரசாத், டாக்டர் இராதாகிருஷ்ணன், பிரதமர் நேரு ஆகியோர் அவரை எதிர் கொண்டு வரவேற்றனர்.

இந்தியக் குடியரசு தின விழாவில் கலந்துகொள்ள வருமாறு டாக்டர் இராசேந்திர பிரசாத் அனுப்பியிருந்த அழைப்பின் பேரிலேயே, பாக். கவர்னர்-ஜெனரல் வந்துள்ளார்.

விமான நிலையத்தில் நிருபர்கள் அவரைச் சந்தித்தபோது, பாகிஸ்தான்—இந்தியா ஆகிய இருநாடுகளிடையேயும் நல்லெண்ணமும், நம்பிக்கையும் கொண்டிருந்தால் பிரச்சினை எதுவும் இருக்காதென்றும், எல்லாப் பிரச்சினைகளுக்கும் நிச்சயம் பரிகாரம் காணமுடியுமென்றும் அவர் கூறினதாகத் தெரிகிறது. தாம், பண்டித நேருவிடம் அதிக நம்பிக்கை வைத்திருப்பதாகவும் அவர் கூறியுள்ளார்.

---

## இலங்கைப் பிரதமர் சீனு செல்வார்

கொழும்பு, ஜன. 25—

இலங்கைப் பிரதமர் சர். ஜான் கொத்தலவாலையை சீனுவுக்கு வருமாறு சூ-என்-லாய் அழைத்திருக்கிறார் என்று தெரிகிறது இச்செய்தியை சிலோன் 'டெய்லி நியூஸ்' என்ற பத்திரிகை தெரிவித்திருக்கிறது.

ஆசிய—ஆப்பிரிக்க மாநாடுகள் முடிவடைந்த பின்னர், கொத்தலாவலை சீனுவுக்கும், ஆஸ்திரேலியாவுக்கும் செல்வார் என்று 'சிலோன் அப்சர்வர்' என்ற இதழ் தெரிவித்திருக்கிறது.

---

## மார்ஷல் டிட்டோ தாயகம் புறப்பட்டார்

கொச்சியில் வழியனுப்பு

மக்கள் வரவேற்புக்கு நன்றியறிவிப்பு

கொச்சி, ஜன. 25—

யூகோஸ்லாவிய குடியரசுத் தலைவர் மார்ஷல் டிட்டோ, இன்று பிற்பகல் இங்கிருந்து தமது கப்பல் மூலம் தாயகத்திற்குப் புறப்பட்டார்.

இந்தியாவில் சுமார் 24 தினங்கள் தங்கியிருந்த அவர் இந்தியாவினின்றும் புறப்படுகையில்இந்திய கப்பற்படையினர் அவருக்கு மிகச் சிறந்த வழியனுப்பு உபசாரம் நடத்தினர்.

அவரது கப்பலுடன் வேறு இரு நாசகாரிக் கப்பல்களும் செல்கின்றன.

இந்தியக் கப்பல்கள் இரண்டும் அந்தக் கப்பல்களுக்கு வழிகாட்டிச் சென்றன.

அவர் புறப்படும்போது இந்தியக் கப்பல் ஒன்று, மரியாதைக்காக குண்டுகளை வெடித்தது.

திரு-கொச்சியிலிருந்து டிட்டோவுக்கு அளிக்கப்பட்ட 'லட்சுமி' என்ற யானையும், மற்றும் மலைப் பாம்பு, பறவைகள் முதலியனவும் அவருடன் ஒரு தனியான வர்த்தகக் கப்பலில் செல்கின்றன.

கொச்சியில் உள்ள இந்தியக் கப்பல்படையினர், இராணுவ அணிவகுப்பு ஒன்றும் விருந்துபசாரமும் டிட்டோவுக்கு அளித்தனர்.

தனது சுற்றுப்பயண காலத்தில் இந்திய மக்களும், தலைவர்களும் தமக்களித்த மகத்தான வரவேற்புக்கு தாம் நன்றி செரிவிப்பதாக மார்ஷல் டிட்டோ குறிப்பிட்டிருக்கிறார்.

---

## பொங்கல்விழாப் பொதுக் கூட்டங்கள்

28—1—55 மாலை 6 மணிக்கு, திருவத்திபுரம் தோ. மு. ஆ. மைஸ்மில் திடலில், திருவத்திபுரம் தி. மு. கழகச் சார்பில், தோழர் சி. வி. சுப்பராயன் தலைமையில் நடைபெறும். தோழர் க. அன்பழகன் பேசுவர்.

* * *

28—1—55 மாலை 6 மணிக்கு, கொசப்பாளையம் தர்மராசா கோவில் எதிரில், ஆரணி தி. மு. கழகச் சார்பில் நடைபெறும் தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், சிற்றுளி சுப்பிரமணியம், கே. சுப்பிரமணியம் ஆகியோர் பேசுவர்.

29—1—55 மாலை 6 மணிக்கு, தோழர்கள் க. அன்பழகன், ப. உ. சண்முகம் ஆகியோர் பேசுவர்.

---

சைதாப்பேட்டை தி.மு.கழக செயற் குழு உறுப்பினர்கட்கு

27—1—55 மாலை $6\frac{1}{2}$ மணிக்கு, சைதாப்பேட்டை தி. மு. கழக இல்லத்தில் செயற் குழுக் கூட்டம் நடைபெறும்.

---

மாணவர்கள் விவாதம்

27—1—55 மாலை $4\frac{1}{2}$ மணிக்கு, பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தில், பச்சையப்பன் கல்லூரி பொருளாதாரக் கழகத்தின் சார்பில், 'இந்தியாவில் நில விநியோகம் ஒரு பொருளாதார அழிவு' என்னும் பொருள் குறித்து கல்லூரி மாணவர்களால் விவாதம் நடைபெறும்.

---

## சி. பி. சிற்றரசு

சுற்றுப்பயணம்

ஜன. 27: கீழப்பழுவூர்
29: தேவாரம்
30: தூத்துக்குடி
பிப். 3: சென்னை

---

# இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம்

## வேலையின்மையைப் போக்குவது பற்றி வெளிநாட்டு நிபுணர்களின் ஆலோசனை

கல்கத்தா, ஜன. 25—

ஆறு வெளிநாட்டு நிபுணர்கள்—மூன்று ரஷ்யர்கள்—இரண்டு அமெரிக்கர்கள்—ஒரு பிரெஞ்சுக்காரர்—ஆகியோர், பிரதமர் நேருவையும், மற்றும் இந்திய திட்டக் குழு உறுப்பினர்களையும் 27-ந் தேதியன்று, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத் தயாரிப்பை ஒட்டி, மாநாடு ஒன்றில் சந்திப்பர் எனத் தெரிகிறது.

இப்போது கல்கத்தாவில் உள்ள இந்திய புள்ளிவிவரக் கழகத்திற்கு வருகை தந்துள்ள அந்த வெளிநாட்டு நிபுணர்கள், வேலையில்லாத் திண்டாட்டம் பற்றியும், மற்றும் அதையொட்டின பிரச்சினைகள் குறித்தும் ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பதாகத் தெரியவருகிறது.

இதுவும், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தை ஒட்டியதுதான் எனத் தெரிகிறது.

இந்த நிபுணர்களை கடந்த மாதம் பண்டித நேரு இந்தோனேஷியா செல்லும்போது சந்தித்தார். அப்போது அவர்கள், திட்டமிடுவது பற்றிய சில அம்சங்களைக் கூறியதாகவும், பண்டிதர் அதைக் குறித்துக்கொண்டதாகவும் தெரிகிறது.

இந்தியப் புள்ளிவிவரக் கழகத்தின் டைரக்டரும் புதுடில்லியில் நடைபெறும் மாநாட்டில் கலந்து கொள்வார் எனத் தெரிகிறது.

---

## நெய்வேலியில் தொழிலாளர்கள் நீக்கம்

அமைச்சரிடம் தூது

சென்னை, ஜன. 24—

நெய்வேலி நிலக்கரிச் சுரங்க வேலைகளிலிருந்து நீக்கப்பட்ட தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கோரி தோழர்கள் எம். கலியாணசுந்தரம், கே. டி. கே. தங்கமணி, எஸ். கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் சென்னை அமைச்சர் பக்தவத்சலத்தை சந்தித்துப் பேசினர். ஆவன செய்வதாக அமைச்சர் வாக்களித்தாராம்.

---

## மாலன்கோவ் - சர்ச்சில் சந்திப்பு

தூரக்கிழக்கு பிரச்சினைக்கு பயன் அளிக்காதாம்

பிரிட்டிஷ் பிரதமர் சர்ச்சில் இன்று காமன்சில் கேள்வி ஒன்றுக்குப் பதில் அளிக்கையில், சோவியத் பிரதமர் மாலன்கோவும், தானும், கிழக்கு நாடுகள் பற்றி சந்தித்துப் பேசுவதால் தற்போதைய சூழ்நிலையில் பயன் ஏதும் கிட்டாது என்று கூறினர்.

முன்னுள் தொழில் அமைச்சரான எம்மானுவெல் ஷின்வெல், உலக நெருக்கடி அதிகமாகிக் கொண்டே போகிறது என்றும், தூரக்கிழக்கில் நிலைமை மோசமாகிறதென்றும், இதுபற்றி மாலன்கோவுடன் சந்தித்துப் பேசினுல் பயன் ஏற்படாதா என்றும் கேட்டார்.

"நாங்கள் சந்தித்துப் பேசினுலும், தூரக்கிழக்குப் பற்றி பேச அது ஒரு தலைப்பு அல்ல" என்று சர்ச்சில் பதில் அளித்தார்.

அமெரிக்கா, மற்ற நாடுகளின் கருத்தை அறியாமல், தன் விருப்பம்போல் காரியமாற்றி வருகிறது என்றும், இதுபற்றி சர்ச்சில் அறிவாரா என்றும் அவர் கேட்டார்.

"எத்தனையோ நெருக்கடிகள் நிலவுகின்றன; தூரக்கிழக்கு பற்றி நானும் மாலன்கோவும் சந்தித்துப் பேசுவதால் இப்போது பயன் ஏதும் விளையாது" என்று சர்ச்சில் பதில் அளித்தார்.

---

## கீழ்க்கோடியில் கொந்தளிப்பு

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

கைமாறி விடுவது, பசிபிக் பகுதியில் அமெரிக்காவின் பாதுகாப்பிற்கு அபாய மேற்படுத்தும் என்பதை அனைவரும் அறிவர்.

எனவே, ஆதிக்க இயல்பு கொண்ட கம்யூனிஸ்டுகள் கைக்கு மேற்படி தீவுகள் மாருமல் பார்த்துக் கொள்வதில், சீனக் குடியர(சியாங்)சிற்கும், அமெரிக்காவிற்கும், சமாதானத்தைக் கோரும் மற்ற விடுபட்ட அரசுகளுக்கும், பொதுவாக உள்ள ஒரு பொது நலம் இருந்து வருகிறது.

இந்தப் பொது நன்மையை அடிப்படையாகக் கொண்டு, 1950-ல், கொரியாமீது கம்யூனிஸ்டு தாக்குதல் நடைபெற்ற பொழுது, பார்மோசா பகுதியைப் பாதுகாப்பதற்கென தனது ஏழாவது கடற்படையை அங்கு அனுப்பி வைத்தது, அமெரிக்கா.

மேற்படி நோக்கத்திற்கு இன்னமும் மதிப்பு இருந்து வருகிறது. தலைவரின் கட்டளைப்படி, அப்பாதுகாப்புப் பணியை ஏழாவது கடற்படை இப்பொழுதும் செய்து வருகிறது.

சீன தேசிய சர்க்காருக்கு அமெரிக்கா இராணுவ—பொருளாதார உதவிகளை கொடுத்துக்கொண்டு வருகிறது. இவ்வுதவி மேலும் தொடரும்.

இதற்குப் பிரத்தியேகமாக பார்மோசாவையும் பெஸ்கடோரசையும், பிறர் படையெடுப்பிலிருந்து பாதுகாப்பது என சீனக் குடி(சியாங்)யரசுடன் சென்ற டிசம்பரில் அமெரிக்கா ஒரு தற்காப்பு ஒப்பந்தம் செய்துகொண்டது. அந்த உடன்படிக்கை செனேட் ஒப்புதலுக்குக் காத்துக் கொண்டு இருக்கிறது.

பார்மோசாவைக் கைப்பற்றியே தீருவது என கம்யூனிஸ்டு சீனு கங்கணங் கட்டிக்கொண்டு, சென்ற செப்டம்பரில் பார்மோசாவின் நுழைவு வாயிலாக உள்ள குவெமய் தீவின்மீது தாக்குதல் நடத்தியது. அதன் பிறகு பார்மோசாவின் வடபாகத்தில் உள்ள டாச்சென் பகுதி தீவுகள் மீது விமானத் தாக்குதல் நடத்தி, சென்ற வாரத்தில் சிக்கியாங்ஷான் தீவைகம்யூனிஸ்டு சீனு பறித்துக் கொண்டது.

'பார்மோசாவைக் கைப்பற்றுவதற்கான ஒரு ஆரம்ப ஒத்திகையே இது' என கம்யூனிஸ்டு சீன அரசாங்கம் வெளிப்படையாகக் கூறி விட்டது. இதன் விளைவாக, அமெரிக்காவின் பாதுகாப்பிற்கு பெருத்த அபாயமும், உலக சமாதானத்துக்குக் கேடுவிளையும் ஒரு நெருக்கடியும் ஏற்பட்டிருக்கிறது.

இருந்தாலும், மேலும் நெருக்கடியான நிலைமை சீர்கேடு அடையாமல் பார்த்துக்கொள்ள வேண்டிய கட்டாயத்தில் அமெரிக்கா இருந்துவருவதால், அவசியம் ஏற்படும்பொழுது அமெரிக்கத் துருப்புகளை உபயோகிக்கும் உரிமை குடியரசுத் தலைவருக்கு இருக்க வேண்டுவது இன்றியமையாததாகும்."

---

பாராட்டுக் கூட்டம் ஒத்திவைப்பு

சென்னை மாநில கல்வித் துறை தலைவர்திரு நெ.து.சுந்தரவடிவேலு அவர்களுக்கு 27—1—55-ல், சென்னை தமிழாசிரியர் கழகச் சார்பில் அளிக்க இருந்த பாராட்டுக் கூட்டம், 10—2—55-க்கு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது என்று அறிவிக்கப்படுகிறது.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணுதுரை, எம். ஏ.,

